# தீக்கதிர்

ஆசிரியர்: எம். என். ராவுண்ணி

அரை வருட சந்தாதாரர்கள் தங்கள் சந்தாவை புதுப்பிக்கவும்

★

சந்தா விபரம்

1 வருடச் சந்தா ரூ. 5-50

½ வருடச் சந்தா ரூ. 3-00

கதிர் 1 | சனிக்கிழமை | 29-2-1964 | விலை 10 காசு | பொறி 36

# நகரசபைத் தேர்தல் முடிவுகளின் படிப்பினை என்ன?

மூனிசிபல் தேர்தல் முடிந்துவிட்டன. கம்யூஸ்ட் கட்சி ஏற்கனவே தனக்கிருந்த ஸ்தானங்களில் பலவற்றை இழந்திருப்பது தேர்தல் முடிவுகளை பார்த்ததும் பளிச்சென்று படும் உண்மை. அதுவும் குறிப்பாக சென்னை நகரில், சென்ற முனிசிபல் தேர்தலீம் தன் சொந்த பலத்திலேயே 3 ஸ்தானங்களைப் பெற்ற கம்யூனிஸ்ட் கட்சிக்கு இந்தத் தடவை காங்கிரஸ், தமிழ் தேசிய கட்சி, திராவிடர் கழகம் ஆகியவற்றின் ஆதரவு அம்மூன்று தொகுதிகளில் இருந்தபோதிலும், அவைகளில் இரண்டை இழந்துள்ளது.

கோவை, மதுரை, திருப்பூர், திண்டுக்கல் முதலிய நகரங்களில் கம்யூனிஸ்ட் கட்சி நகரசபை நிர்வாகத்தில் பிரதான சக்தியாக இருந்துவந்த நிலையை இழந்துள்ளது,

இராஜபாளையம், ஈரோடு, காஞ்சிபுரம் முதலிய நகரங்களில் கம்யூனிஸ்ட் கட்சி ஏற்கனவே தனக்கிருந்த ஸ்தானங்கள் அனைத்தையும் இழந்ததுமட்டுமல்ல, ஒரு ஸ்தானத்தையும் பெறவில்லை.

இன்னும் பல நகரசபைகளில் கட்சிக்கு சென்ற தேர்தலைவிட இத் தேர்தலில் குறைவான ஸ்தானங்கள் கிடைத்துள்ளன.

திருச்சி, கரூர், தூத்துக்குடி முதலிய நகரங்களில் காங்கிரஸ் கட்சியோடு உடன்பாடு கண்டதன் விளைவாக, கம்யூனிஸ்ட் கட்சிக்கு இரண்டொரு ஸ்தானங்கள் அதிகமாகக் கிடைத்துள்ளன. ஆயினும் இந்நகரசபைகளில் காங்கிரசு கட்சிக்கு மிகப் பெரிய மெஜாரிட்டி கிடைத்திருப்பதனாலும், கம்யூனிஸ்ட் கட்சிக்கு முறையே 6, 3, 4 ஸ்தானங்களே கிட்டியுள்ளதாலும், கம்யூனிஸ்ட் கட்சிக்கு முனிசிபல் நிர்வாகத்தில் குறிப்பிடத்தக்க செல்வாக்கு ஒன்றும் இருக்கப்போவதில்லை. மாறாக, காங்கிரஸ் கட்சியின் ஏகபோக ஆதிக்கம் அதிகரித்துள்ளது.

திண்டிவனத்தில், காங்கிரஸ் கட்சியுடன் உடன்பாடு கண்ட போதிலும் முன்பிருந்த ஸ்தானமே கிட்டியது. கடலூரில் ஒரே ஒரு ஸ்தானத்தை கம்யூனிஸ்ட் கட்சி ஏற்றுக்கொண்டு காங்கிரஸ் கட்சியோடு உடன்பாடு செய்துகொண்டபோதிலும், அந்த ஒரு தொகுதியிலும் வெற்றி பெறவில்லை! செங்கற்பட்டு நகரத்திலும் இதே கதிதான்.

நாட்டில் வளர்ந்துவரும் நெருக்கடியான காலகட்டத்தில் எந்தத் தொழிலாளி வர்க்கத்தின் கட்சி, நிலைமையில் குறிக்கிட்டு வளர்ச்சிப் போக்கை நிர்ணயிக்கும் பாத்திரம் வகிக்க வேண்டுமோ அந்தக் கம்யூனிஸ்ட் கட்சிக்கு தமிழ் நாட்டில் பலம் குன்றியுள்ளது. ஜனநாயக உள்ளம் படைத்தவர்கள் அனைவர்களுக்கும் இது வேதனையைத் தரும் என்பதில் சந்தேகமில்லை. இந்த நிலை ஏற்பட்டதற்கு, கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாட்டுத் தலைமை கடைப்பிடிக்கும் கொள்கையே காரணம். இந்திய முதலாளி வர்க்கத்திற்கு தொழிலாளி வர்க்கத்தை பலியாக்கும் போக்கு அந்தக் கொள்கை. முதலாளி வர்க்கக் கட்சியாகிய, ஆட்சிபீடத்திலிருக்கும் காங்கிரஸ் கட்சிக்கு வால் பிடிக்கு காங்கிரஸ் தலைவர்களின் ஏவலாளர்களாகப் பணியாற்றும் போக்கு அந்தக் கொள்கை.

இதைப்பற்றி விவரிப்பதற்கு முன்னதாக, இந்தத் தேர்தல் முடிவுகளின் மற்றைய அம்சங்களைப் பார்க்கவேண்டியது அவசியம்.

காங்கிரஸ் கட்சிக்கு முன்பிருந்ததைவிட அதிக நகரசபைகளில் பூரண மெஜாரிட்டி கிடைத்துள்ளது. இதைக்கொண்டு தி.மு.க. இத் தேர்தல்களில் படு தோல்வி அடைந்துவிட்டது என்று கூறப்படுகிறது. இது உண்மையல்ல.

வேலூர், ஆம்பூர், ஆரணி, காஞ்சிபுரம், திருநெல்வேலி முதலிய பல நகரசபைகள் புதிதாக தி.மு.க.வின் நிர்வாகத்தின் கீழ் வரும் நிலையிலிருக்கின்றன. பொள்ளாச்சி, உடுமலைபேட்டை ராசிபுரம், விழுப்புரம், சிதம்பரம் புதுக்கோட்டை முதலிய நகரங்களில் கணிசமான ஸ்தானங்களை முதல் தடவையாக அது பெற்றுள்ளது. மேலும் பல நகரசபைகளில் அதற்கிருந்த ஸ்தானங்கள் அதிகரித்துள்ளன.

கோவையில் முன்பு தி.மு.க.வுக்கு 6 ஸ்தானங்களிருந்தது; இப்போது 4 ஆகக் குறைந்துள்ளது. மதுரையில் சென்ற தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி உட்பட பல கட்சிகளுக்கிடையே ஏற்பட்ட தொகுதி உடன்பாட்டின் விளைவாக தி.மு.க 2 ஸ்தானங்களைப் பெற்றது. இந்தத் தடவை அத்தகைய உடன்பாடு இல்லை. தி.மு.க. 2 ஸ்தானங்களையும் இழந்தது. காங்கிரஸ் — கம்யூனிஸ்ட் உடன்பாட்டுடன் செயல்பட்ட திருச்சி, கரூர், தூத்துக்குடி முதலிய நகரங்களில் தி.மு.க. அதிக ஸ்தானங்களைப் பெறவில்லை. ஆனால் முன்பும் அதற்கு இங்கு மிகவும் அதிக ஸ்தானங்கள் இல்லை.

நிலைமை இப்படியிருக்க, தி.மு.க.வுக்கு படுதோல்வி ஏற்பட்டுவிட்டதாகக் கூறுவது சரியல்ல.

**காங்கிரஸ் கட்சி பல புதிய நகரசபைகளில் மெஜாரிட்டியாக வந்தது என்றால், அது கம்யூனிஸ்ட் கட்சியின் கையிலிருந்த ஸ்தானங்களை கைப்பற்றியதன் மூலமும், சுயேச்சைகளின் ஸ்தானங்களைக் கைப்பற்றியதன் மூலமுமே யாகும்.**

கட்சியின் நிர்வாகக் கமிட்டி, இத்தேர்தல் சம்பந்தமாக, தமிழ்நாடு மூனிசிபல் தேர்தல் சம்பந்தமாக, 3 இலட்சியங்களுக்காகப் பாடுபடவேண்டுமென்று கூறியது அதில் ஒன்றுகூட நிறைவேறவில்லை.

1) கட்சி கூடுதல் ஸ்தானங்களை பெறவேண்டும். மாறாக குறைவான ஸ்தானங்களைப் பெற்றுள்ளது. கோவை, மதுரை போன்ற முனிசபல் நிர்வாகத்தின் ஆதிக்க நிலையையும் இழந்தது.

2) காங்கிரஸ் கட்சியின் அதிகார ஆதிக்க ஏகபோகத்தை பலவீனப்படுத்தவேண்டும். மாறாக அந்த ஏகபோகம் அதிகரிப்பதற்கு கம்யூனிஸ்ட் கட்சி தலைமை கைங்கர்யம் செய்தது.

3) பிற்போக்குக் கூட்டணியை முறியடிக்கவேண்டும். இதுவும் மாறாகவே நடந்துள்ளது.

காரணம், தமிழ்நாடு தலைமை ஆரம்ப முதற்கொண்டே எப்படியும் காங்கிரஸ் கட்சியின் ஆதிக்க ஏகபோகம் எல்லா முனிசிபாலிட்டிகளிலும் வரவேண்டும் என்ற ஒரே குறிக்கோளைக் கொண்டு பாடுபட்டது. இதற்காக எப்படியும் காங்கிரஸ் கட்சியோடு உடன்பாடு செய்துக்கொள்ள அது படாத பாடுபட்டது. பெருவாரியான முனிசிபாலிட்டிகளில் உடன்பாடுகாணவில்லை எனில், அதற்குப் பிரதானமான காரணம் காங்கிரஸ் தலைமை அதை விரும்பவில்லை என்பதுதான்.

**அகற்ற வேண்டியவர்களை அரவணைத்து,**
**[redacted] வேண்டியவர்களை புறக்கணித்த**
**ஓர் மதியற்ற தேர்தல் கொள்கையின்**
**அருவருக்கத்தக்க, ஆபத்தான,**
**பரிதாபகரமான தோல்வி!**

## கண்மூடித்தனமான காங்கிரஸ் ஆதரவு!

மத்திய நிர்வாகக் கமிட்டியின் தீர்மானத்தில், நாம் போட்டியிடாத தொகுதிகளில் காங்கிரசுக்குப் பொதுவான ஆதரவு என்ற பேச்சுக்கே இடமில்லை என்றும் ஏதாவது ஒரு தொகுதியில் காங்கிரஸ் அபேட்சகருக்கு ஓட்டளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டால், அதை மாகாண செயற்குழுதான் பிரத்யேக காரணங்களுக்காக முடிவு செய்யவேண்டும் என்று கூறியிருந்தது.

இதைப் புறக்கணித்து, செயற்குழு உறுப்பினர்களும், நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்களும்— ஏன் செயலாளரும் கூட— எவ்வளவோ கூட்டங்களில், நாம் நிற்காத இடங்களில் காங்கிரஸ் கட்

(2-ம் பக்கம் பார்க்க)

முற்போக்கு அரசியல் வார ஏடு

விலை 10 காசு




கதிர் 1 | 29-2-64 | பொறி 36

# மக்களின் ஒற்றுமையைப் பாதுகாப்போம்!

கிழக்கு பாகிஸ்தானில் ஏற்பட்ட வகுப்பு கலவரங்களும், மேற்கு வங்கத்தில் ஏற்பட்ட வகுப்புகலவரங்களும் இந்திய பாகிஸ்தான் மக்களுக்கு மாபெரும் அபாயத்தை விளைவிக்கக் கூடியவையாகும்.

காஷ்மீர் நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து, இந்த சம்பவங்கள் தோன்றின; இவற்றைத்தூண்டி விடுவததில் ஏகாதிபத்திய சக்திகளுக்கும் இதர பிற்போக்கு சக்திகளுக்கும் குறிப்பிடத் தக்க பங்கு உண்டு என்பதை நாம் உணரவேண்டும்.

வகுப்புக்கலரைங்களின் மூலம் மக்களைப் பிளவு படுத்தி ஜனநாயக சக்திகளை பலவீனப்படுத்த பிற்போக்கு சக்திகள் முயற்சிக்கின்றன, இந்த முயற்சிகளையெல்லாம் ஜனநாயகத்திற்காகப் போராடும் முற்போக்கு சக்திகள் தீவிரமாக எதிர்த்துப்போராடி முறியடிக்க வேண்டும்,

வர்க்கப் போராட்டத்தைச் சீர்குலைப்பதற்கும் அதைத் தடம் புரளச்செய்வதற்கும் வகுப்புக்கலவரங்களை ஒரு பெரும் ஆயுதமாக சுரண்டும் சக்திகள் பயன்படுத்துகின்றன. இந்த உண்மையை உழைப்பாளிமக்கள் ஒருபொழுதும் மறந்து விடக்கூடாது.

மதவழியில், மொழிவழியில் சிறுபான்மைபோராக இருக்கும் மக்களின் உரிமைகளை பாதுகாப்பதும் மதச்சார்பற்ற வகையில் அரசு இயங்கவேண்டுமென்பதை உறுதிப்படுத்துவதும் தொழிலாளிவர்க்க இயக்கத்தின் கடமையாகும்; தொழிலாளிவர்க்க இயக்கத்துடன் இணைந்துள்ள சகல முற்போக்காளர்களின் கடமையாகும். வகுப்புக்கலகங்களைத் தூண்டும் முயற்சிகளை நாம் வண்மையாக எதிர்த்துப்போராட வேண்டும். மத அடிப்படையில் மக்களைப் பிளவுசெய்யும் சகல முயற்சிகளையும் நாம் அம்பலப்படுத்த வேண்டும்; பொறுமையாகவும் விடாப்பிடியாகவும் அந்த முயற்சிகளை நாம் எதிர்த்துப் போராடவேண்டும். உழைப்பாளி வர்க்கத்தின் ஒற்றுமையையும், மக்களின் ஒற்றுமையையும் கண்ணின் கருமணிபோல் நாம் பாதுகாக்க வேண்டும்.

முதல் பக்கத் தொடர்ச்சி

# பகைவருக்குப் பாத பூஜை!

சிக்கு ஓட்டுபோடவேண்டும் என்று பேசியுள்ளனர்.

சென்னை நகரத்தில் இது உச்சக்கட்டத்திற்குச் சென்றது. கம்யூனிஸ்ட் கட்சிக்கும் — காங்கிரசுக்கும் உடன்பாடு ஏற்படவில்லை. 3 தொகுதிகளையே கம்யூனிஸ்ட் கட்சிக்கு காங்கிரஸ் விட்டுக் கொடுத்து, போட்டியிடாமலிருந்தது.

ஆயினும், நாம் போட்டியிடும் மேலும் 8தொகுதிகள் நீங்கலாக மிச்சமுள்ள தொகுதிகள் பூராவிலும் காங்கிரஸ் கட்சியையோ, அது ஆதரிக்கும் நபர்களையோ, அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாயினும் சரி—கம்யூனிஸ்ட் கட்சித் தலைமை ஆதரித்தது. திராவிடர் கழகத்தைச் சேர்ந்தவர்களுக்கும் தலைமை ஆதரவு அளித்தது. லஞ்சலாவண்யத்தில் ஊறிப்போனவர்கள், சமுக விரோதிகள், யாராயிருப்பினும் சரி, காங்கிரஸ் முத்திரை, அல்லது காங்கிரஸ் ஆதரவு இருந்தால் போதும், கம்யூனிஸ்ட் கட்சித் தலைமை அவர்களை ஆதரிப்பதற்குச் சிறிதேனும் தயங்கவில்லை.

நேற்றுவரையில் சுதந்திரா கட்சி பிரமுகராக இருந்த கே. எம். சுப்பிரமணியத்தை ஆதரிக்தவும் அதற்குத் தயக்கமில்லை. ஏனெனில் அவர் இந்தத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியின் அபேட்சகர் என்ற காரணம் தான். திரு. சிவஞான கிராமணியாரைத் தலைவராகக் கொண்ட தமிழரசுக் கழகம், தொழிற்சங்கத் தலைவர் கிருஷ்ணமூர்ததி, 20 ஆண்டுகளுக்கு மேலாக கார்ப்பரேஷனில் நேர்மையாக பணியாற்றி வரும், நேர்மையாளர் என்று ஸ்தல மக்களின் நன்மதிப்பை பெற்றிருக்கும் திரு. கோவிந்தசாமி போன்றவர்களை எல்லாம் கட்சியின் தலைமை எதிர்த்தது.

எத்தனை கார்களிலும், இடங்களிலும், ஊர்வலங்களிலும், காங்கிரஸ், கம்யூனிஸ்ட், தமிழ் தேசியக் கட்சி, திராவிடர் கழகம், போட்டி முஸ்லீம் லீக் ஆகிய கட்சிகளின் கொடிகள் பறந்தன!

தோழர் பாலதண்டாயுதம் எத்தனைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டங்களில் பேசினர்! தி. க. தலைவர் திரு. பெரியாரோடும் சேர்ந்து ஒரே மேடையில் பேசுவதற்கு பெருமைப்பட்டுக்கொண்டார்.

திராவிடர் கழகமும், கள்ள மார்க்கெட்டுக்காரர்கள் லஞ்ச ஊழலில் வளர்ந்தவர்கள், மாஜி சுதந்திராக்கள் ஆகியோர் அனைவரையும் உள்ளிட்ட காங்கிரஸ் கட்சி—கம்யூனிஸ்ட் கட்சி ஆகியவைகள் தேர்தலில் காங்கிரசின் வெற்றிக்காக ஒன்று சேர்வதற்கு இந்தத் தலைமை கொடுத்துள்ள பெயர் "தேசிய முற்போக்கு அணி"!!

கம்யூனிஸ்ட் கட்சி தோழர்கள், பெருவாரியான நகரங்களில் காங்கிரசை எதிர்த்து தேர்தலில் கடுமையாகப் போராடிக் கொண்டிருக்கும்போது, மாகாணம் பூராவும் இத்தகைய காங்கிரஸ் ஆதரவுப் பிரச்சாரம் நடத்திய தலைமையை என்னவென்று அழைப்பது? அந்தத் தோழர்கள் அனைவருக்கும் துரோகம் செய்யும் தலைமையல்லவா? ஜனங்கள் எப்படி கட்சியை நம்புவார்கள்? இதன் விளைவு தானே இன்று பல ஸ்தானங்களை நாம் இழக்க வேண்டிவந்தது. இதைக் கட்சித்தோழர்கள் சிந்திக்க வேண்டும், சரியான முடிவுக்கு வரவேண்டும்.

## "தீக்கதிர்" பாதுகாப்பு நிதிக்கு

| | |
|---|---|
| முன்பு பிரசுரமானது | ரூ. 899—00 |
| புவனேஸ்வரம் மகாநாட்டுக்குப்போன தோழர்கள் | ரூ. 15—00 |
| ஸ்ரீ பெரம்பதூர் கட்சி அனுதாபிகள் | ரூ. 13—12 |
| எ. பழனிசாமி | ரூ. 5—00 |
| மொத்த | ரூ. 932—12 |

எங்களின் வேண்டுகோளுக்கிணங்கி "தீக்கதிர்" பாதுகாப்பு நிதிக்கு மேற்கண்ட தோழர்கள் அனுப்பித் தந்த ரூபாய்களை நன்றியுடன் பெற்றுக்கொண்டோம். மேலும் உங்களின் பேருதவியை "தீக்கதிர்" எதிர் பார்க்கின்றது.

—மானேஜர், "தீக்கதிர்"

5-ம் பக்கத் தொடர்ச்சி

# தேசத்தின் கோரிக்கைகளுக்காக தேசம் தழுவிய இயக்கம்!

விலைகள் பெரிய அளவு ஸ்திரத் தன்மை பெற்றுவிடும். மக்களின் வாழ்வில் ஒரு நிம்மதி தோன்றும்.

அதனுல்தான் AITUCன் 11 அம்சக்கோரிக்கைமட்டியலில் இவை முக்கிய இடம் பெற்றுள்ளன. சரியான புள்ளிக கணக்கின் அடிப்படையில் சகல தொழிலாளிகளுக்கும் சரியான பஞ்சப்படி கிடைத்தால் அநியாய லாபம்பெற்றுக் கொழுக்கும் முதலாளித்வம் டலவீனப்படும். பாங்குகளையும் உணவுப்பொருட்களின் மொத்த வியாபாரத்தையும் அரசு மேற்சொண்டால் ஏக போகங்களில் வளர்ச்சி; நாட்டின் செல்வம் ஒருசிலர் கைகளில் குவிவது தடுக்கப்படும். இக்கோரிக்கைகள் தேசததின் கோரிக்கைகள்.

இக்கோரிக்கைகள் நிறைவேறினுல்தான் நாட்டின் பொருளாதாரம் சில ஏகபோகக் குடும்பங்களிடமிருந்து பாதுகாக்கப்படும். இவை நிறைவேறினுல் தான் திட்டத்தின் சகல அம்சங்களும் கைவிடாமல் நிறைவேற்றும் சாத்தியப்பாடு ஏற்படும். இவை நிறைவேறினுல் தான் விலைவாசிகள் ஸ்திரத் தன்மைபெறும். இவை நிறைவேறினுல்தான் நாடு புதுவரிகளிலிருந்து தப்ப வழி பிறககும் இவை நிறைவேறினுல்தான் உழைககும் மககளின் வாழ்வில் ஓரளவு நிம்மதி பிறக்கும். உற்பத்தியைப் பெறுக்குவதில் புது ஊககம் பிறக்கும். அதனுல்தான் இவை தேசததின் கோரிககை கள். இவற்றிற்காக இந்தியத் தொழிலாளி வர்க்கம் என்றும் போல் போராடப் புறப்பட்டுள்ளது எப்பொழுதும்போல் AITUC இதற்கான நடவடிக்கைகளைத துவக்கி வைத்துள்ளது. ஆனுல் இககோரிககைகள் எல்லோருக்கும் பொதுவானவை INTUC ஐச் சேர்ந்தோரும் HMS ஐச் சோர்ந்தோரும், இன்னும் எந்த அகில இந்திய தொழிற்சங்க மையத்தில் சேராதோரும் இந்த நடவடிக்கைகளில் AITUC உடன் ஒன்றுபட்டு நிற்க வேண்டும் என்று வற்புறுத்துகிறோம். இதர சங்கங்களின் ஒத்துழைப்பைப் பெறுவதற்கு AITUCன் சங்கங்கள் தொடர்ந்து முயற்சிகளை எடுத்துவர வேணடும் என்று நினைவுபடுததுகிறோம்.

உரிமைக்கொடி உயர்த்துங்கள்!

ஒன்றுபட்டு போராடுங்கள்!

வெற்றியை நோக்கி முன்னேறுங்கள்!

## இந்தியப் பொருளாதாரம் எங்கே செல்லுகிறது?—4

# சோஷலிசப் போர்வையில் ஏகபோகங்களின் வளர்ச்சி!

கேந்திரமான தொழில்கள் எதிலும், 1960க்குள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஏற்றுக்கொண்ட சாதாரணமான குறிக்கோள்களைககூட அடைய முடியவில்லை என்பதை கீழ்க் காணும் அட்டவணையில் காணக.

| | 1950 | 1960 | 1960 குறிக்கோள் | சாதித்தது % |
|---|---|---|---|---|
| எஃகு கட்டிகள் (லட்சம் டன்களில்) | 14 | 35 | 60 | 50% |
| நிலக்கரி ,, | 323 | 526 | 600 | 88% |
| சிமெண்டு ,, | 27 | 78 | 130 | 60% |
| மின்சாரம் (லட்சம் கிலோவாட்டுகள்) | 23 | 57 | 70 | 80% |
| சல்பூரிக் ஆஸிட் (ஆயிரம் டன்களில்) | 99 | 360 | 500 | 72% |
| சோடா ,, | 56 | 250 | 40 | 62% |
| உரம் (நைட்ரஜன்) ,, | 9 | 110 | 290 | 38% |

1951-ம் வருடத்தில் இரண்டாவது திட்டப் பரிசீலனை, என்ற பெயரால், பல யந்திரத் தொழில்களையும் கேந்திரமான தொழில்களையும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திற்கு ஒத்திப்போட்டுவிட்டார்கள்.

பல அடிப்படையான தொழில்களில் இன்னும் முழுப் பொருளையும் இந்தியாவிலேயே உற்பத்தி செய்யும்படியான நிலை ஏற்படவில்லை தற்போது சிமெண்டுத் தொழிலும் மக்களுக்குத் தேவைப்படும் யந்திரக் கருவிகள் உற்பத்தியிலும் இறுதியாக உற்பத்தி செய்யப்படும் பொருளின் உறுப்புகளில் 33⅓% ஐ தான் நமது நாட்டின் மூலப் பொருட்களிலிருந்தும் உற்பத்தி சாதனங்களிலிருந்தும் பூர்த்தி செய்ய முடியும். 1965-ம வருடத்தில்கூட 90%தான். இவற்றை உள்நாட்டில் பூர்த்தி செய்ய முடியுமென்று திட்டக் கமிஷனும், கனயந்திரத் தொழிலமைச்சரின் இலாகாவும் ஒப்புக்கொண்டுள்ளன. இதே மாதிரி 1965ல் காகித உற்பத்திக்கான யந்திரங்கள், 70%ம், சர்க்கரை ஆலை யந்திரங்களின் உற்பத்தியில் 85%ம், சல்பூரிக் ஆஸிட் உற்பத்தி செய்யும் யந்திரங்களின் உற்பத்தியில் 80 சதவிகிதமும், மோட்டார் வண்டி உற்பத்தி செயயும் யந்திரங்களில் 90%ம்தான் சாத்தியப்படும். பாக்கியை இத் தொழில்களில் பூர்த்திசெய்து கொண்டு முழு பொருட்களையும் உண்டாக்குவதற்கு வெளிநாடுகளின் உதவியின்றி முடியாது. இம்மாதிரி, மிக ஏனைய யந்திரங்கள் தேவைப்படும் தொழில்களிலேயே அதற்கவசியமான சகல சாமான்களும் ஏற்பாடுகளும் இந்தியாவிலேயே பூர்த்தி செய்துகொள்ள முடியுமென்பது 1965-க்குள் சாத்தியப்படாதென்றால், அடிப்படையான தொழில்களிலும், மிக நுட்பமான யந்திரங்களை உற்பத்தி செய்வதிலும், சுய தேவையைப் பூர்த்தி செய்துகொள்ளும் நிலையை அடைய நமக்கு இன்னும் எத்தனையோ வருடங்களாகுமென்பது தெளிவு.

உணவு தானிய உற்பத்தியும் எண்ணெ வித்துக்களின் உற்பத்

## உற்பத்திப் பெருகியும் உணவு குறை தீரவில்லை!

தியும் 1950ம வருடம் 625 லட்சம் டன்களிலிருந்து 1960ம் வருடத்தில் 875 லட்சம் டன்களுககு அதிகரித்திருக்கின்றன. ஆனால் இதில் விதிக்கப்பட்டிருந்த 1960ம் வருட குறிக்கோள் 900 லட்சம் டன்கள் ஆகும். கடந்த இரண்டு வருடங்களாக இந்த உற்பத்தி அந்த நிலையிலேயே தேங்கியும் நிற்கிறது. ஆனல் இந்த உற்பத்தி நமது மக்களுக்கு உணவளிககப் போதாது. அதனுல் 1947 முதல் 1960 வரை ரூ. 1609 கோடி செலவில் 378 லட்சம் டன்கள் உணவு தானியங்களை சர்க்கார் இறக்குமதி செய்திருக்கிறது. மேலும் 1961ம் வருடத்தில் அமெரிக்க சர்க்காரின் பி.எல். 480 என்ற திட்டத்தின்கீழ், அடுத்த 4 வருடங்களில் அமெரிக்காவிடமிருந்து ரூ. 650 கோடிக்கு 160 லட்சம் டன்கள் கோதுமையும், 10 லட்சம் டன்கள் அரிசியும் இறக்குமதி செய்துகொள்ள இந்திய சர்க்கார் உடன்படிக்கை செய்துகொண்டிருக்கிறது. இவ்வளவு பெரிய அளவுக்கும் கோடிக்கணக்கான ரூபாய்கள் கொடுத்து இறக்குமதி செய்தும், நமது சர்க்கார ஒவ்வொரு நபருக்கும் தினசரி சராசரி 40 தோலா எடையுள்ள உணவு தான்யங்கள் கூட சப்ளை செய்ய முடியவில்லை. 1950-ல் இந்த எடை 50 தோலாவாக

## உண்மையான நிலச்சீர்திருத்தம் தேவை

இருந்தது. போதுமான மாமிசமும், பாலும், எண்ணெய்ச் சரக்குகளும் கிடைக்காமற் போகும்போது உணவு தானியங்கள் ஒரு நபருக்கு தினசரி சராசரி 60 தோலாக்களாவது தேவைப்படுமென்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

விவசாயத் தொழிலாளிக்கும், ஏழை விவசாயிக்கும் நிலம் கிடைப்பதற்கு உத்திரவாதமளித்து, விவசாயிகளை அடிமைப்படுத்தியுள்ள லேவாதேவி வட்டிக் கொடுமைகளையும், கடன் சுமைகளையும் அகற்றி, விவசாயப் பொதுமக்களுக்கு விதைகளும், உரமும், விவசாயக் கருவிகளும் சுலபமாகக் கிடைப்பதற்கு உதவிசெய்து, உண்மையான நிலச் சீர்திருததமாக விளங்கக்கூடிய ஒரு நிலச் சீர்திருத்தத்தை இன்னும் நிறைவேற்ருதது, விவசாய அரங்கத்தில் சர்க்கார் செய்யத் தவறியுள்ள அடிப்படையான குற்றமாகும். ஜமீன்தார்களும், நிலச் சுவான்தார்களும் தங்களுடைய வரி வசூலிக்கும் உரிமைகளை இழந்ததற்காக சர்க்கார் அவர்களுக்கு ரூ 675 கோடி நஷ்டஈடு அளிக்கிறது. சொந்த சாகுபடி நிலம் என்று ஏராளமான நிலங்களை அவர்கள் தங்கள் கையில் வைத்துக்கொள்ள சர்க்கார் அனுமதிக்கிறது. உச்ச வரம்புச் சட்டம் என்று சில மாநிலங்களில் நிறைவேற்றப் பட்ட சட்டங்களும் மிக அதிகமான அளவுக்கு உச்சவரம்பை அனுமதித்தன; அந்தச் சட்டங்களிலிருந்த பல ஓட்டைகளை நன்கு பயன்படுத்திக்கொண்டு நிலச்சுவான்தார்கள் தங்களுடைய நிலங்களை தங்களது குடும்பத்தினருக்குள்ளேயே பிரித்து எழுதிவைத்துக்கொண்டார்கள். இதன் விளைவாக சர்க்கார் மிச்ச நிலத்தை எடுத்துக் கொண்டு விவசாயத் தொழிலாளிகளுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் பகிர்ந்துகொடுப்பது என்ற பேச்சுக்கே இடமில்லாமல் போய்விட்டது.

சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள், கூட்டுறவு கடன் ஸ்தாபனங்கள், தக்கவி கடன் உதவி, கிணறு வெட்டும் வேலைகளுக்கு உதவி — முதலியவற்றில், பலன் அனைத்தும் பெரும்பாலும் விவசாயிகளின் பணக்காரப் பகுதிகளுக்கே கிடைக்கின்றன, மிகச் சிறிய அளவுக்கே நடுத்தர விவசாயிகளுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் எட்டுகின்றன. காங்கிரஸ் சர்க்கார் எடுத்துள்ள நடவடிக்கைகளிலெல்லாம் பழைய மிராசுதார்களும், நிலப் பிரபுக்களும் முதலாளித்துவ மிராசுதாராக ளாக மாறிக்கொள்வதற்கும், பணக்கார விவசாயிகளென்ற ஒரு சிறிய பகுதியை சிருஷ்டிப்பதற்கு பயன்பட்டிருக்கின்றன.

நிலைமை இவ்வாறிருப்பினும், நேரு சர்க்காருக்கு வக்காலத்து வாங்கிப் பேசுகிறவர்கள், ஒரு புறத்தில் நிலப் பிரச்சினை தீரவில்லையென்றும், சர்க்கார் நிலப் பிரபுத்துவததை பெருமளவுக்குக் கட்டுப்படுதத விரும்பியும் விவசாயிகள் இன்னும் அதிருப்தியுடனேயே வாழ்கிருர்களென்றும் ஏற்றுக்கொண்ட போதிலும், நிலச் சீர்திருத்தம் உண்மையாக நடைபெறுவது மேலும் சாத்தியப்படலாமென்றும், அவசியமென்றும், இதை சாதிகக இன்னும் சர்க்காரை வற்புறுத்தலாமென்றும் "நம்பிக்கை" தெரிவித்துப் பேசுகிருர்கள். விவசாயப் பொதுமக்களுக்கு பலனளிக்கக்கூடிய ஒரு அடிப்படை நிலச் சீர்திருததத்தை காங்கிரஸ் சர்க்கார் வேண்டுமென்றே மறுத்துவந்துள்ள 15 வருட அனுபவங்களுக்குப் பிறகுகூட, இவர்கள் மேறகூறியவாறு பேசி நேரு சர்க்காரைப் பற்றிய பிரமைகளை மக்களிடம் பரப்பி வளர்க்க முயற்சிக்கிருர்கள். சிலர் இன

# தேசிய வருமானம் யாருக்குப் பயனளிக்கிறது?

னும் ஒரு படி மேலே போய், விவசாயிகளுக்குப் பிரித்துக் கொடுக்க உபரி நிலமே இப்போது இல்லாததால், நில வினியோகம் என்ற கோஷமே இபபோது கொடுக்கக்கூடாதென்று கூற முற்பட்டுவிட்டார்கள்.

1960-61ம் வருட விலைவாசி நிலவர அடிப்படையில் கணக்கிட்டால், 1950-ம் வருடம் 10,000 கோடி ரூபாயாக இருந்த தேசீய வருமானம் 1960-ம் வருடம் 14000 கோடி ரூபாயாக உயர்ந்து, இதே காலகட்டத்தில் ஒவ்வொரு நபரின் சராசரி வருமானமும் ரூ. 280லிருந்து ரூ. 320 ஆக உயர்ந்திருக்கிறது, ஆனால் இந்த அதிக வருவாயும் செல்வமும் அனைத்தும் மேல்தட்டிலுள்ள ஒரு சிறு பணக்காரக் கூட்டத்திற்குத்தான் சேர்ந்தது என்றும், ஏழைகளின் நிலையும் நடுத்தர வர்க்க மக்களின் நிலையும் அபிவிருத்தியடையாததோடு, மேலும் சீர்கெட்டிருக்கிறதென்றும், பொருளாதார நிபுணர்கள் மட்டுமின்றி, சர்க்காரே இப்போது ஒப்புக்கொள்ளகின்றனர்.

செல்வம் ஒரு சிலரிடம் குவிந்துவருவதை கீழ்க்கண்ட விபரங்களிலிருந்து காணலாம்.

(அ) 1948ல் இந்தியாவிலிருந்த கம்பெனிகளின் உற்பத்தியில் 50 சதவிகிதத்தை மொத்த கம்பெனிகளின் 10 சதவிகிதக் கம்பெனிகளே அடைந்தன. 1960ல் இதே 10 சதவிகிதக் கம்பெனிகளுக்கு மொத்த உற்பத்தியில் கிடைத்த பங்கு 60 சதவிகிதமாகும்.

(ஆ) 1948-ம் வருடத்தில், 10 முக்கிய பாங்குகளிடம் மட்டும் கையிருப்பாக ரூ. 280 கோடி டெபாஸிட் தொகை இருந்தது. எல்லா பாங்குகளின் மொத்த டெபாசிட் தொகையில் இது 50 சதவிகிதம். 1960ல் இதே 10 பாங்குகளின் டெபாசிட் கையிருப்பு ரூ. 900 கோடியாகவும் மொத்த பாங்க் டெபாசிட்டுகளில் 70% ஆகவும் உயர்ந்தது.

(இ) 1948ல் பத்து இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் மட்டும் மொத்த இன்ஷ்யூரன்ஸ் வியாபாரத்தில் 50%ஐ அனுபவித்தன. 1960ல் இதே 10 கம்பெனிகளுக்கு மொத்த இன்ஷ்யூரன்ஸ் வியாபாரத்தில் 60 சதவிகிதம் கிடைத்தது.

(ஈ) 400 நபர்களுக்கு மட்டும் 4000 கம்பெனி டைரக்டர் பதவிகள் இருக்கின்றன. இவர்களில் 10 பேர் மட்டும் 620 டைரக்டர் பதவிகளை அனுபவிக்கிறார்கள்.

(உ) தனியார் துறையில் மட்டும் அபிவிருத்தி அடைந்துள்ள முக்கிய தொழில்களில் முதலாளிகள் போட்டுள்ள மூலதனம் ரூ. 3000 கோடி. இதில் டாட்டா, பிர்லா, இருவரது கம்பெனிகளுக்கு மட்டும் மொத்தம் ரூபாய் 600 கோடி மூலதனம். அதாவது மொதத (தனியார் துறை) மூலதனத்தில் 20 சதவீதம் இரு பெரு முதலாளிகளின் போகம்.

(ஊ) 1950-ல் 1001 கம்பெனிகள் சுமார் ரூ. 1000 கோடி மூலதனம் வைததிருந்தன. 1960க்குள் இது ரூ. 2300 கோடியாக அதிகரித்துவிட்டது. 1950ல் (வரிகளை கழிப்பதற்கு முன்) அவர்களுக்குக் கிடைத்த வருடாந்திர லாபம் ரூ. 70 கோடி. 1960 ச்குள் இந்த வருடாந்திர லாபம் ரூ. 200 கோடியாக உயர்ந்துவிட்டது. 1950லிருந்து 1960 வரை இவர்களுடைய மொத்த லாபம் ரூ. 1200 கோடி!

இதற்கு நேர்மாறாக வேலையில்லாத் திண்டாட்டமும் வறுமையும் உழைப்பாளி மக்களுக்கு அதிகரித்துக்கொண்டே வந்திருக்கின்றன. இப்போது நாட்டில் ஆண்களும் பெணகளுமாக சுமார் 20 கோடி பேர் வேலை தேடும் நிலையில் இருக்கின்றனர், அவர்களில் முற்றிலும் வேலையே இல்லாதவர்கள், அதாவது ஒரு நாளைக்கு ஒரு மணி நேரம்கூட வேலை கிடைக்காதவர்கள் எண்ணிக்கை 2 கோடி பேர். தினந்தோறும் 2 மணி நேரத்திலிருந்து 3மணி நேரம் வேலை கிடைப்பவர்கள் சுமார் 7 கோடியிலிருந்து 8 கோடி பேர் ஆகும்.

## வேலையில்லாக் கொடுமை!

### சென்னை சிவராமன்

திட்டக்கமிஷனின் விபரங்கள் பின்வருமாறு:—இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் ஆரம்ப வருடத்தில் வேலையில்லாதோர் 53 லட்சம். இரண்டாவது திட்ட இறுதியில் வேலையில்லாதோர் 90 லட்சம். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் வேலையில்லாதோர் எண்ணிக்கை 1 கோடி 20 லட்சமாக இருக்கும்.

குடும்பங்களின் மாதாந்திர செலவை எடுத்துக்கொண்டால் மொத்த குடும்பங்களில்:—

மாதம் ரூ. 50-க்கும் குறைவாக செலவு செய்யும் குடும்பங்கள் 25 சதவீதம்.

மாதம் ரூ. 51 முதல் ரூ. 100 வரை செலவு செய்யும் குடும்பங்கள் 40 சதவீதம்.

மாதம் ரூ. 101 முதல் ரூ. 250 வரை செலவு செய்யும் குடும்பங்கள் 30 சதவீதம்.

மாதம் ரூ 250-க்கு மேல் மாதச் செலவுள்ள குடும்பங்கள் 5 சதவீதம்.

ஒரு அறை அல்லது இரண்டு அறைகள் மட்டுமே உள்ள குடிசைகளிலோ வீடுகளிலோ வசிக்கும் குடும்பங்கள் மொத்தத்தில் 70 சதவீதம்

## கல்வியும்—சுகாதாரமும்

தலைக்கு மாதாந்திர சவரட்சணைக்கு குறைந்தபட்சம் ரூபாய் 35/-வது தேவைப்படுமென்று இருக்கும்போது, கி பி. 2000-ம் வருடத்திற்குப்பின் மாதம் ரூ. 25-க்கு மேல் செலவு செய்ய முடியாத நிலையில்தான் ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பங்கு இருக்குமென்று சமீபத்தில் வெளிவந்த ஒரு கணிப்பு கூறுகிறது.

1960-ல், 8வது வகுப்புவரை கல்வி பயில்பவர்கள் (அந்த வயது சிறுவர்–சிறுமியர் கணக்கில்) 10 சதவீதம். இப்போதுள்ள கல்வியறிவிப்பு வேகத்தில் அந்த அளவு வயதினர் எல்லோரும் கல்வி பெறுவதற்கு 30 வருடங்களிலிருந்து 40 வருடங்கள் பிடிக்கலாம்.

1950-ல் உள்ள ஜனத்தொகையில் சராசரி 6000 பேருக்கு ஒரு டாக்டர் இருந்தார். 1960லும் கிட்டத்தட்ட இதே விகிதம்தான் உள்ளது. 1950-ல் ஆஸபத்திரிகளில் இருந்த படுக்கைகளின் எண்ணிக்கை சுமார் 10000 பேருக்கு சராசரி 3 ஆகும். 1960-ல் இது 4 ஆக உயர்ந்திருக்கின்றன. எல்லா நவீன வளர்ச்சியுள்ள நாகரீக நாடுகளிலும் சராசரி 1000 பேருக்கு 1 டாக்டரும், 10000 பேருக்கு சராசரி 100 ஆஸ்பத்திரி படுக்கைகளும் உள்ளன.

## மக்கள் தாங்கும் சுமைகள்

இவ்வளவு குறைவான அளவுக்கு முதலாளித்துவ வளர்ச்சியைப் பெறுவதற்கே கடந்த 10 வருடங்களில் செலவழிக்கப்பட்டுள்ள தொகை என்ன தெரியுமா? நிர்வாகச் செலவுகளுக்காக. மத்திய சர்க்கார், மாநில சர்க்கார், ஸ்தல ஸ்தாபனங்கள் உட்பட ரூ. 10,000 கோடி. அபிவிருத்தி திட்டங்கள், சமூக நல திட்டங்கள் இவற்றிற்காக மேலும், சர்க்கார் துறையில் ரூ 15000 கோடியும், தனியார் துறையில் ரூ 5000 கோடியும் செலவாயிருககின்றன.

இந்திய சர்க்கார் கொடுக்க வேண்டியிருந்த அன்னியக் கடன் மதிப்பீடு ரூ 2560 கோடியிலிருந்து 1963 மார்ச் மாதத்திற்குள் ரூ. 8000 கோடியாக அதிகரித்துவிட்டது. இதில் அன்னியக் கடன் தொகைகளாகப் பெற்றது ரூ. 50 கோடியிலிருந்து இப்போது ரூ. 1380 கோடியாகப் பெருகிவிட்டது. இந்தத் தொகையில் (அமெரிக்க) டாலர் கடன மட்டும் ரூ. 25 கோடியிலிருந்து ரூபாய் 170 கோடியாக அதிகரித்திருக்கிறது. நமக்கு அன்னியரிடம் சொத்தாக இருந்த தொகை ரூ. 2009 கோடியிலிருந்து ரூ. 265 கோடியாகக் கரைந்துவிட்டது.

இவ்வளவு அதிகரித்துள்ள சுமைகளையெல்லாம் யார் தாங்குகிறார்கள்?

1950–51ல் வரிச்சுமை ரூ. 750 கோடி. 1960–61ல் இது ரூ. 1900 கோடியாக உயர்ந்தது. 1963 மார்ச்சுக்குள் 2500 கோடியாயிற்று. அதாவது வரிச்சுமையானது தலைக்கு ரூ. 20 ஆக இருந்தது ரூ. 50க்கு மேல் உயர்ந்ததென அர்த்தம். ஏழைகள்மீதும், நடுத்தர வர்க்கத்தினர்மீதுமே பெரும்பாலும விழும்படியான வரிகளை அதிகப்படுத்தியே இது நடந்திருக்கிறது. 'எக்சைஸ்' வரிகளும், விற்பனை வரிகளும் மட்டும் ரூ 130 கோடியிலிருந்து ரூ. 550 கோடி ஆகியிருக்கின்றன.

அவசரநிலைப் பிரகடனத்திற்குப் பிறகு நாட்டுப் பாதுகாப்பு செலவுகளுக்கான பட்ஜெட் தொகை ரூ. 350 கோடியிலிருந்து ரூ. 900 கோடியாயிற்று. புதிதாக ரூ. 250 கோடி வரை வரிகள் விதிக்கப்பட்டன. இவை பெரும்பாலும் சாதாரண மக்கள் அன்றாடம் உபயோகிக்கும் அத்தியாவசியப் பொருட்கள் மீது 'எக்சைஸ்' வரிகளை உயாத்தியதின் மூலம் பெறப்பட்டு, இதோடு ஒப்பிட்டால் பெரிய பெரிய திமிங்கலங்கள் அதிக தொந்தரவின்றி தப்பித்துக்கொள்ளும் நிலையில் செய்யப்பட்டிருக்கிறது. புதிய கட்டாய சேமிப்புத் திட்டத்தில் மாதம் ரூ 126க்கு மேல் சம்பாதிக்கும் உழைப்பாளிகள் சம்பளத்தில் 3 சதவீதம் முதல் 5 சதவீதம் வரை கொடுக்குமாறு கேட்கப்பட்டனர். இதேமாதிரி,

(5-ம் பக்கம் பார்க்க)

## உழைப்பவர் உருக்குலைய, கோமான்களை கொழுக்க வைக்கின்றனர்!

6-ம் பக்கத் தொடர்ச்சி

# புள்ளிக்குத் தகுந்த பஞ்சப்படி தேவை!

யத்தை எவரால் மறுக்க முடியும்? நமது கோரிக்கை எவராலும் மறுக்க முடியாத நியாயமாக இருந்தபோதிலும் இந்த நாட்டில் இன்று எந்த உழைப்பாளிக்கும் விலைவாசி உயர்வுககு ஏற்ற பஞ்சப்படி தரப்படுவதில்லை. விலைவாசி உயர்வை 70% ஈடுகட்டும் அளவோ அல்லது 80% ஈடுகட்டும் அளவேதான் பஞ்சப்படி தர இயலுமே அல்லாது முழுக்க முழுக்க 100% ஈடுகட்டும் அளவுதர இயலாது என்று இதுகுறித்துப் பரீசீலித்த பல விசாரணைக் கோர்ட்டுகளும் "நீதிஸ்தலங்களும் கூறியுள்ளன. இருப்பினும் சிலதொழில்களில் தொழிலாளி வர்க்கத்தின் இடைவிடாத கிளர்ச்சிகளின் விளைவாக புள்ளிக்குத்தகுந்த பஞ்சப்படி என்ற கொள்கை ஒப்புக்கொள்ளப்பட்டு அமுலாகி வருகிறது. இவ்வாறு புள்ளிக்குத்தகுந்த பஞ்சப்படி பெறும் தொழிலாளிகள் 100க்கு 2·5கும் கம்மியே. மற்ற உழைப்பாளிகள் அனைவரும், சர்க்கார் துறையிலும் தனியார் துறையிலும் உள்ள உழைப்பாளிகள் அனைவரும், இது கிடைக்காது நஷ்டமடைந்து வருகின்றனர், நாளுக்குநாள் தேய்ந்து வருகின்றனர். ஆகவேதான் எல்லாத் தொழிலாளிகளுக்கும் புள்ளிக்குத்தகுந்த பஞ்சப்படி உடனே தரவேண்டும் என்று A.I.T.U.C. கோரியுள்ளது.

'வேலியே பயிரைமேய்கிறது'' புள்ளிக்குத் தகுந்த பஞ்சப்படி என்ற கொள்கையைச்சில

## புள்ளிக் கணக்கில் சர்க்கார் மோசடி!

தொழில்களில் ஒப்புக்கொள்ள வேண்டி வந்தபின் முதலாளி வர்க்கமும் அதன் அரசும் என்ன செய்தார்கள்? வர்க்க குணத்தின்படி மோசடி செய்தார்கள். புள்ளிக்கணக்கு தயார் செய்வதுயார்? அரசாங்கம்தானே! விலைவாசிகளின் உயர்வைக் கணக்கிட்டு அவ்வப்பொழுது எந்த அளவு உயர்ந்துளளது என்று புள்ளிக்கணக்குத் தயாரிக்கும் பொறுப்பை எப்படி நிறைவேற்றினுர்கள்? சிலசமயங்களில் விலைஉயர்வை முழுமையாகக் கணக்கில் எடுக்காமல் மோசடி செய்தார்கள். சிலசமயங்களில விலைகுறைந்துள்ளது என்று கணக்கிட்டுப் புள்ளிகள் தயாரித்து முதலாளி வர்க்கத்திற்கு, அது தரவேண்டிய பஞ்சப்படியில் மிச்சம் பிடித்துக் கொடுத்தார்கள்! சமூகத்தைப்பாதுகாக்கும் வேலியல்ல நாங்கள்; முதலாளி வர்க்கத்தின் லாபநஷ்டங்களைப் பாதுகாக்கும்வேலி நாங்கள் என்று காட்டிக்கொண்டார்.

கையும் களவுமாகப்பிடிபட்டு விட்டதால் புள்ளிக்கணக்குத் தயாரிப்பதில் இவ்வாறு 'தவறுகள்' ஏற்பட்டுள்ளது உண்மைதான் என்று மகாராஷ்டிர சர்க்காரும், குஜராத் சர்காரும் ஒப்புக்கொண்டுள்ளாாகள்! குல்ஜாரிலால் நந்தா அவர்களும் இது உண்மைதான் என்று ஒப்புக்கொண்டுள்ளார்கள். 20 வருடங்களுக்கு முன்பு இருந்த வீட்டுவாடகை மட்டத்தையும் 10 வருடங்களுக்கு முன்பு இருந்த துணிவிலை மட்டத்தையும் ஆதாரமாகக் கொண்டு இன்றைய புள்ளிக் கணக்யகத் தயாரித்துள்ளார்

**ராமநாதன்**

கள் என்ற விவரங்கள் அம்பலமாகயுள்ளன. இதன் மூலம் மட்டும் கடந்த சில வருடங்களில் பம்பாய் மில்முதலாளிகள் கோடிக்கணக்கான ரூபாய்களை —மில் தொழிலாளிகளின் கூலியை — கொள்ளையடித்துள்ளார்கள்! நாடு முழுவதும் கணக்கெடுத்துப் பார்த்தால் இந்தத்திருட்டின் அளவு எத்தனை எத்தனை கோடிகள் ஆகுமோ!

ஆகவேததான் AITUC கோருகிறது புள்ளிவிவரங்கள் தயாரிக்க முத்தரப்புக்குழுககள் வேண்டும் என்று. சர்க்கார் பிரதிநிதி முதலாளி வர்க்கப் பிரதிநிதி தொழிற்சங்க பிரதிநிதி, ஆகிய மூவரும் கொண்ட குழு ஒன்றின் மூலம விலை உயர்வை கண்காணித்து வந்து உண்மையான உயர்வின் அளவில் புள்ளிக் கணக்குத் தயாரிக்க வேண்டும் என்பது மிகவும் நியாயமான வேண்டுகோள். மோசடியைத் தடுக்க இது ஒன்றே வழி! நாசமாய்விட்ட நம்பிக்கை மீண்டும் வளர இது ஒன்றேவழி. உண்மையான விலை உயர்வைக்கணக்கிட்டுச் சரியான புள்ளிக்கணக்கு தயாரிப்பதும் அந்தப் புள்ளிக்கணக்குப்படி இந்தியாவில் உள்ள எல்லா உழைப்பாளிகளுக்கும் பஞ்சப்படி தருவதும் தான் மனிதன் விலை குறையாமல் பாதுகாக்கும் ஒரே வழி.

விலைவாசிகளை ஏற்றிப் பொதுமக்களைக் கொள்ளையடித்து மூலதனத்தை வளர்த்துக்கொள்ளும் இத்திருப் பணிக்கு நாட்டில் உள்ள பாங்குகள்—முதலாளி வர்க்கத்திற்கு குறிப்பாக பெருமுதலாளிகளுக்கு—பேராயுதமாகவிளங்குகின்றன. பெரிய பாங்குகளின நிர்வாகம் பெருமுதலாளிகளின் கைகளில்தான் இருக்கின்றன. வயிற்றைககட்டி வாயைக்கட்டி நாட்டுமக்களின் சில பகுதிகள் சேமிப்பாகப் போட்டு வைத்துள்ள பணம் இந்தபாங்குகளில் டிபாசிட்டுகளாகக் கிடக்கின்றன. இந்தப்பணத்தை யெல்

## பாங்குகள்—ஏகபோகங்களின் பேராயுதம்!

லாம் தங்களது சொந்த லாபத்தைப் பெருக்கிக்கொள்ள வர்த்தகத்தில் ஈடுபடுத்தி சரக்குகளை ஏராளமாக வாங்கி முடக்கி வைத்து விலைவாசிக்ளை ஏற்றி ஏறிய விலையில் விற்றுக் கொள்ளையடிக்கின்றன.

பொதுமக்களின் பணத்தை மூலதனமாகக்கொண்டு பொது மக்களைச் சூறையாடி, தனி லாபம் சம்பாதித்துக் கொள்கின்றனர்! இவ்வாறெல்லாம் செய்துதான் கடந்த 17 ஆண்டுகளில் இந்திய முதலாளி வர்க்கம் 1947ல் ரூ. 900 கோடியாக இருந்த தனது மூலதனத்தை இன்று ரூ. 2500 கோடியாக உயர்த்தியுள்ளார்கள் (அவர்களே சொல்லும் கணக்கு இது; கணக்கில் வராதபணமோ ஏராளம். சுமார் ரூ. 3000 கோடி முதல் ரூ 7000 கோடிவரை இந்தக்கள்ளப்பணம் இருக்கும் என்று ஆளும்கட்சியைச் சேர்ந்த பெரியதலைவர்கள் கருதுகிறுர்கள!) இவ்வாருக வளர்ந்துள்ள மூலதனத்தில் மிகப் பெருமபகுதி விரல்விட்டு எணணக்கூடிய சில ஏகபோகக் குடும்பங்களின் கைகளிலே தான் போய்ச்சேர்ந்துள்ளது என்பதும் ஆட்சிப்பொறுப்பில் உள்ளவர்களே ஒப்புக்கொண்டுள்ள உண்மை

ஆக செலவம் ஒரு சிலர் கைகளில் குவிந்து வருவதற்குப் பயன்படும் உபாயம் விலைவாசி உயர்வு. விலைவாசிகளை உயர்த்தப்பயன்படும் பேராயுதம் பாங்குகள் மீது இவர்களுககு இருககும் பிடிப்பு. ஆகவேதான் விலைவாசிகளைக கட்டுப்படுத்த வேண்டுமென்றுல் ஏகபோகங்களைப் பலவீனப்படுத்த வேண்டும். பாங்குகளை அவர்களது நிாவாகத்திலிருந்து சர்க்கார் கைகளுக்கு மாற்றவேண்டும். தொழிலாளி வாக்கம் நீண்ட காலமாக வற்புறுத்தி வந்துள்ள இக்கோரிக்கை இன்று தேசத்தின் கோரிக்கையாக மலர்ந்துள்ளது. தேசத்தில் உள்ள உண்மையான ஜனநாயக சக்திகள் அனைத்தும் இதன் அவசியத்தை இன்று ஏற்றுள்ளனர், ஆளும் கட்சியிலே உள்ள பலரும் இதனை வற்புறுத்தத் தலைப்பட்டுள்ளனர்.

தவிர உணவுப்பொருட்களின் மொத்த வியாபாரத்தையும் இக்கொள்ளைக் காரர்களின் கைகளிலிருந்து பறித்து விட்டால் பொதுமக்களை ஒவ்வொரு நாளும் வயிற்றில் அடிக்கும் கொடுமைக்கு முற்றுப்புள்ளி வைத்து விடுவது சாத்தியமாகும். பாங்குகளையும் உணவுப்பொருட்களின் வியாபாரத்தையும் அரசு மேற்கொண்டு விட்டால் விலைவாசிகளை உயர்த்த இயலாது பொது மக்களின் அன்றாடத் தேவைகளின்

(2-ம் பக்கம் பார்க்க)

4-ம் பக்கத் தொடர்ச்சி

பல மாநில சர்க்கார்கள் ஏற்கெனவே நில வரிகளை உயர்த்தி வசூலித்துவந்தபோதிலும், ரூ. 5-ககு மேல் கிஸ்தி செலுத்தும் விவசாயிகள் தங்களுடைய மொத்த கிஸ்தி தொகையின் சரிபாதி பணத்தை கட்டாய சேமிப்புக்குத் தரும்படி கேட்கப்பட்டார்கள், வருடம் ரூபாய் 15000க்கு வியாபாரம் செய்யும் வியாரிகளும் இத்திட்டத்தின் கீழ் வந்தார்கள்.

தங்கக் கட்டுப்பாடு சட்டமும் விதிகளும், நிறைய தங்கமோ அல்லது நகையோ வைத்திருப்பவர்கள், ஒரு குறைந்தபட்ச அளவுக்குமேல் வைத்திருப்பதை டெபாசிட் செய்துவிட வேண்டுமென்று கோரவில்லை. ஆனுல் லட்சக்கணக்கான பொற்கொல்லர்கள் வேலை இழப்பதையே விளைவித்தது.

செலாவணியில் இருக்கும் கரென்ஸி நோட்டுகளின் மதிப்பு ரூ. 1400 கோடியிலிருந்து ரூ. 2100 கோடி ஆயிற்று. பேங்குகளின் கடன் உதவி மூலமாக பண நடமாட்டம் ரூபாய் 2000 கோடியிலிருந்து ரூபாய் 3000 கோடி ஆயிற்று. இவற்றின் விளைவாக பொருட்களின் விலைவாசி 30 சதவிகிதம் உயர்ந்தது.

இககட்டுரையில் கொடுக்கப்பட்டுளள பல புள்ளி விபரங்களெல்லாம் நமக்கு அறிவுறுத்துவது என்ன? நமது இந்திய நாட்டில் கட்டப்பட்டுவருவது சோஷலிச சமுதாய அமைப்பே அல்ல. அதற்கு மாருக, ஒரு முனையில் செல்வம் சிலரிடம் குவிந்து கொண்டு மறு பக்கத்தில் மக்களின் பெரும் பகுதியினருக்கு வறுமையும் துன்பமும் அளிக்கும் நிர்தாட்சணியமான முதலாளித்துவமே இங்கு வளர்க்கப்பட்டுவருகிறது.

Edited and Published by Sri M. N. Ravunni. 3/2, Alandoor Road, Saidapet. Madras-15.
Printed by Sri A. N. Sathyanarayanan. Geetha Printing Works, 4, Hospital Road. Saidapet, Madras-15.

 விலைவாசி உயர்வைக் குறைக்க

 நியாயமான பஞ்சப்படி பெற

 பாங்குகளை தேசவுடமையாக்க

 உணவுப் பொருட்களின் மொத்த வர்த்தகத்தை தேசவுடமையாக்க

# அறப்போர் ஆரம்பித்துவிட்டது!

பிப்ரவரி மாதம் 20, 21, 22 மூன்று தினங்கள் இந்தியாவின் எல்லா மாநிலங்களிலும்—தமிழகம் நீங்கலாக—உண்ணாவிரதம். எல்லாத் தொழில் கேந்திரங்களிலும், ஆலைகளுக்கு முன்பு அல்லது சட்டசபை காரியாலயங்களுக்கு முன்பு அல்லது நகரங்களின் முக்கிய பகுதிகளிலே பல நூற்றுக்கணக்கான தொழிற்சங்கத் தலைவர்கள், தொழிற்சங்க ஊழியர்கள் உண்ணாவிரதத்தை அனுஷ்டித்தனர். தமிழகத்தில் மார்ச் மாதம் 3, 4, 5 தேதிகளில், இதேபோல் சென்னை முதல் தூத்துக்குடி வரை தொழில் நகரங்களில் பல நூற்றுக்கணக்கானவர்கள் உண்ணாவிரதம் இருக்கப்போகின்றனர்.

(இயல்பாக ஒரு கேள்வி எழுகின்றது. ஏன் தமிழகத்திலும் பிப்ரவரி மாதம் 20, 21, 22 தேதிகளிலே இந்த ஏற்பாடு செய்யப்படவில்லை? அகில இந்தியாவிலும் தேசவியாபிதமாக ஒரே சமயத்தில் இந்த நடவடிக்கை எடுக்கப்படவேண்டும் என்ற அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் முடிவு இருக்க, எதனால் அதன் தமிழகக் கிளை அந்தத் தேதிகளில் நடத்தாமல் ஒத்திப் போட்டது. இவ்வாறு ஒத்திப் போட்டதன் அவசியமென்ன? தமிழகமெங்கும் பிப்ரவரி 5 தேதியிலும், 17 தேதியிலும் நகரசபைத் தேர்தல்கள் நடந்து முடிந்துவிட்டன. சென்னை மாநகராட்சிக்கான தேர்தல்கள் பிப்ரவரி 22 தேதியில். தமிழ் மாநிலக் கம்யூனிஸ்ட் கட்சியின் திரிபுவாதத் தலைமை சென்னை மாநகராட்சிக்கான தேர்தலில் மத்திய நிர்வாகக் கமிட்டியின் முடிவுக்கு நேர் எதிராக, கட்சி போட்டியிடும் 11 இடங்கள் நீங்கலாக இதர இடங்களில் மிகப் பெரும்பாலான இடங்களில் 80 இடங்களுக்கு மேலாக காங்கிரசை ஆதரிப்பது என்று முடிவு எடுத்து வேலை செய்துகொண்டு இருந்தது. அப்படிப்பட்ட சமயத்திலும், சென்னையிலும் தமிழகத்தின் எல்லா நகரங்களிலும் காங்கிரஸ் சர்க்காரின், விலைவாசி உயர்வுக்கு ஆதரவான கொள்கைகளை எதிர்த்து பெரிய தோர் அறப்போர், உண்ணாவிரதப் போர், நடந்தால் அது இவர்களது அரசியலுக்கு நேரடிச் சவாலாக இருக்குமல்லவா. ஆகவேதான் இந்த தர்மசங்கடமான நிலையிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக இவர்கள் ஒத்தி வைத்தார்கள். பிப்ரவரி 20, 21, 22 என்பது மார்ச் 3, 4, 5, ஆக மாறிற்று!)

இதன்பின் மார்ச் மாதம் 7-ந் தேதி இந்தியா முழுவதும் எல்லா தொழிற்சாலைகளிலும், அலுவலகங்களிலும் 15 நிமிட ஆர்ப்பாட்டம். காஷ்மீர் முதல் குமரி வரை நாடு முழுவதிலும் உள்ள, தனியார் துறையிலும் பொதுத் துறையிலும் உள்ள எல்லாச் சுரங்கங்களிலும், தோட்டக் காடுகளிலும், ஆலைகளிலும் எல்லாவிதமான அலுவலகங்களிலும் பாடுபட்டு உழைக்கும் பாட்டாளிகள் வேலை துவங்குமுன்னர் அல்லது முடிந்தவுடனே, 15 நிமிட நேரம் உரிமைக் குரல் எழுப்பி அமைதியான ஆர்ப்பாட்டங்களில் ஈடுபடுவார்கள்.

அடுத்த மூன்றாவது கட்டம் ஏப்ரல் மாதம் 6, 7, 8 தேதிகள். அந்தத் தேதிகளில் டில்லிமா நகரத்திலே பாராளுமன்றத்தின் முன் இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் இருந்து திரட்டப்பட்ட 1000 தொழிற்சங்க சத்யாக்ரஹிகள் மறியல் போராட்டத்தை நடத்துவார்கள். அதே சமயத்தில் எல்லா நகரங்களிலும் சட்டசபை அல்லது கலெக்டர் அல்லது, தாலுக்கா அதிகாரியின் அலுவலகங்களுக்கு முன் ஆர்ப்பாட்டங்கள் நடக்கும்.

(A.I.T.U.C-ன் தமிழகக் கிளையின் அறிக்கைகளில் இந்த ஆர்ப்பாட்டங்கள் நடக்கவேண்டும் என்பது குறிப்பிடவில்லை என்பதையும் தோழர்கள் கவனிக்க வேண்டும்.)

இவ்வாறாக அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் திட்டமிட்ட மூன்று கட்டப் போராட்டம் துவங்கிவிட்டது. முதல் கட்டம், தமிழகம் நீங்கலாக, முடிந்துவிட்டது. தமிழகத்தில் இப்போர் ஆரம்பிக்க இருக்கும் நேரத்தில் இம்மாபெரும் இயக்கத்தின் முக்கியமான நோக்கங்களைத் தெளிவுபடுத்துவது அவசியம்.

காங்கிரஸ் சர்க்காரின் 17 ஆண்டு ஏகபோக ஆட்சியின் ஒரு நேரடி சாதனை விலைவாசி உயர்வு! நாட்டின் பொருளாதாரத்தை சீரழித்துக்கொண்டும், சர்க்கார் பிரகடனம் செய்துள்ள திட்டத்திற்கே வேட்டு வைத்துக்கொண்டும், நாட்டு மக்களின் வாழ்வை நாசப்படுத்திக் கொண்டும் இருப்பது இந்த விலைவாசி உயர்வு. கட்டுக்கடங்காமல் வருடா வருடம் விலைவாசிகள் ஏறிக்கொண்டே இருக்கின்றன. இது அகஸ்மாத்தாக ஏற்படுவதல்ல, தானாக ஏற்படுவதல்ல. இந்திய முதலாளி வர்க்கத்திற்கு மேற்கத்திய நாடுகளின் முதலாளித்துவங்களுக்கு இருந்த வாய்ப்பு இன்று கிடையாது. பிரிட்டிஷ், பிரெஞ்சு முதலிய முதலாளித்துவங்களுக்குக் காலனிகள் கிடைத்தன. அந்தக் காலனி நாடுகளைத் தங்களது மிருக பலத்தைக் கொண்டு பகற் கொள்ளையடித்தார்கள். அந்தக் காலனிகளில் இருந்த ராஜாக்களின், குறுநில மன்னர்களின் நவாப்புக்களின், பெரும் தனவந்தவர்களின் பிரபுக்களின் செல்வங்களை நேரடியாகத் திருடிக்கொண்டார்கள். பின்னர் அந்த நாடுகளை அடிமைப்படுத்திச் சுரண்டினார்கள். இவ்வாறாக பூதாகாரமான வளர்ச்சிக்கான ஆரம்ப மூலதனத்தைத் தேடிக்கொண்டார்கள். இந்திய முதலாளி வர்க்கத்திற்கு இந்த வாய்ப்பு இல்லை. ஆகவே இந்திய மக்கள் மட்டும் சூறையாடித்தான் மூலதனத்தைப் பெருக்கியாகவேண்டும். அதற்காக உழைக்கும் மக்களை ஒட்ட ஒட்ட உறுஞ்சியாகவும் வேண்டும்; உழைக்கும் மக்கள் உட்பட சகல மக்களையும் சொட்டச் சொட்டச் சுறண்டியாகவும் வேண்டும். இந்தத் திருப்பணிக்கான ஒரு முக்கியமான கருவியே விலைவாசி உயர்வு. இக்கருவியைக்கொண்டு மக்களின் பற்றாக்குறையான ஊதியத்தையும் தங்கள் கைகளுக்கு மாற்றிக் கொண்டு வருகிறார்கள். இதை முதலாளித்துவ வர்க்கத்தின் அரசு உணர்ந்தே இதற்குச் சாதகமாக நடவடிக்கைகளை எடுத்துவருகிறது. விலைவாசி உயர்வைப் பற்றிக் கவலைப்படுவதாக அவர்கள் பேசுவதெல்லாம வெறும்பாசாங்கு.

சரக்குகளின் விலைகள் உயர்கின்றன என்றால் அதன் அர்த்தம் என்ன? சென்ற வருடம் வாங்கிய சம்பளமும் பஞ்சப்படியும்தான் இவ்வருடமும்; ஆனால் சென்ற வருடத்தைவிட இவ்வருடம் எல்லாப் பொருட்களினுடைய விலைகள் கூடிவிட்டன. அதே ஊதியத்தைக் கொண்டு இவ்வருடம் சென்ற வருடம் வாங்கியிருந்த உணவை துணியை இதரசாமான்களை வாங்க முடியாது. அதாவது முதலாளித்வ மார்க்கெட்டில் உழைப்பாளி என்ற சரக்கின் விலை குறைந்துள்ளது என்று அர்த்தம். மனிதனது உழைப்பினால் உண்டாக்கப்பட்ட எல்லா சரக்குகளினுடை விலைகள் உயருகின்றன. ஆனால் மனிதன் என்ற சரக்கின் விலை குறைகின்றது! இது முதலாளித்வ வளர்ச்சியின் வேதனை மிகுந்த விநோதம்!

ஆகவேதான் விலைவாசி உயர்வுக்கு ஈடான பஞ்சப்படி வேண்டும்—மனிதன் விலையும் இதர சரக்குகளின் விலை அளவுக்கு உயரவேண்டும் என்று நாம் கோறுகிறோம். இதன் நியா

(5-ம் பக்கம் பார்க்க)

# வீரத் தமிழகமே தயாராகு!